# காயாமொழி அருள்மிகு முப்புராதி





# அம்மன் அருள் தரிசனம்



# காணிக்கை

அருள்மிகு அன்னை முப்புராதித் தாயின் திருவடியில் இருந்து எங்களை வழிநடத்தும் அன்புத் தந்தையார், அமரர் சி.பா. ஆதித்தனருக்கு இந்த நூலை காணிக்கை ஆக்குகிறேன்.

பா. இராமச்சந்திர ஆதித்தன்..
உரிமையாளர்.
பகலவன் பதிப்பகம்




அண்ட சராசரத்தை, அதன் ஒவ்வொரு அணுவினையும், சகல உயிரினங்களையும் இயக்குவது, யாருமறியாத மகாசக்தி.

அந்த சக்தியினையே தெய்வமாக, ஆதி பராசக்தியாக நாம் உருக்கொடுத்து வணங்குகிறோம்.

அன்னை பராசக்தி பல்வேறு திருஉருவங்களில்—பல திருத்தலங்களில் கோயில் கொண்டு எண்ணற்ற பக்தர்களுக்கு திருவருளைத்தந்து மகிழ்கின்றாள்.

கதிரவன் பூமியான காயாமொழியிலே முப்புராதி தேவியென எழுந்தருளியுள்ளாள் அந்த அன்னை.

மனிதனின் அவையவங்கள் இயங்க சக்தி தேவை. சிந்திக்க, பேச, பார்க்க, கேட்க, எந்த ஒரு காரியத்தையும் செய்ய சக்தியின்றி முடியாது. அந்த சக்தியைத் தருபவள் நம் அன்னை முப்புராதி தேவி.

வழிபடுபவர்க்கு அறிவை, ஆற்றலை, வீரத்தை, விவேகத்தை தந்தருளுகின்றாள் அந்தத் தாய்.

எனது தந்தையார் அமரர் சி. பா. ஆதித்தனார் அவர்கள் அன்னை முப்புராதியின் மீது அளவற்ற பக்தி கொண்டிருந்தார்கள்.

‘‘வற்றாத சக்தியைத் தா...’’ என்று வாழ்நாள் முழுதும் அன்னையை வணங்கி வந்தார்கள்.

அன்னையும் அந்த தவப்புதல்வருக்கு சக்தியை அளவின்றி அள்ளி வழங்கினாள்.

பல்வேறு துறைகளில் சாதனைகள் பல நிகழ்த்தி— வெற்றிகளைக் குவித்து— இந்த மண்ணின் பெருமையை உயர்த்தினார் அந்த அமரர்.

அன்னை முப்புராதி மீது எனது தந்தையார் கொண்டிருந்த பக்தியும், பாசமும், ஈடுபாடுமே என்னையும் அன்னையின் புகழ்பாடும் தொண்டனாக்கியது. இந்தப்பக்திப் பாமாலையை தொகுத்து வெளியிடும் ஆர்வத்தை எனக்குத் தந்தது.

இந்நூலில் திரு. மகாராஜா ஆதித்தன் அவர்கள் எழுதித் தந்துள்ள தல புராணம் சிறப்பு அம்சமாக இடம் பெறுகிறது.

மகாகவி அ. கு. ஆதித்தர் அவர்கள் புனைந்துள்ள அம்மன் கும்மி இந்த நூலுக்கு அணிகலனாக அழகு சேர்க்கிறது.

''அம்மன் அருள் தரிசனம்'' என்ற இந்த பாமாலையை மிக அழகாக இயற்றித் தந்துள்ளார் திருப்பரங்குன்றம் கவிஞர் க. குழந்தை வேலன்.

தவத்திரு காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரியார் சுவாமிகளின் அருளுரை இப்பாமாலைக்கு ராஜ கிரீடமாக விளங்குகிறது.

பூந்தமிழ் சொல் மலர்களால் புகழ் மாலை தொடுத்து 'அம்மன் அருள் தரிசனம்' எனும் இந்த ஆரத்தை அன்னை முப்புராதித் தாயின் திருவடியில் சமர்ப்பிக்கிறேன்.

பா. இராமச்சந்திர ஆதித்தன்.

23-7-1982
சென்னை.



# அருளுரை

காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராச்சாரியார் சுவாமிகள்

எங்கும் நிறைந்துள்ள பரம்பொருள், இந்த உலகைப் படைத்து, காத்து, ரக்ஷிப்பதற்காக பல உருவ வடிவங்களில் பல க்ஷேத்திரங்களில் இறைவன் வடிவமாக இருந்து அருள் பாலித்துக் கொண்டிருக்கிறது.

கைலாயத்தில் சிவபெருமானும் பார்வதியும் வைகுண்டத்தில் ஸ்ரீமந் நாராயணனும் லக்ஷ்மியுமாக குடி கொண்டிருந்த போதிலும், அவர்களுடைய சக்தியே இந்த உலகத்திலுள்ள மக்கள் உய்வதற்காக ஒவ்வொரு கிராம, நகரங்களிலும் கிராமதேவதை வடிவமாக அருள் பாலித்துக் கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒவ்வொரு அம்மை. அப்பா இருப்பது போல், இந்த உலகம் முழுவதற்கும்

அம்மையாகவும், அப்பனுகவும் இருப்பவன் இறைவன். ''அம்மையே அப்பா ஒப்பிலாமணியே'' என்று புகழப் படு கிறது இறைவனே!

ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலுமுள்ள கோவில் களில் குடி கொண்டுள்ள இறைவனுக்கு ஒரு சரித்திர இதிகாசம் உண்டு. தேவலோகத்திலுள்ள தேவர்கள் முதல் ரிஷிகள், கந்தர்வர்கள், அசுரர்கள், பூலோகத்திலுள்ள பெரியோர்கள் பலராலும் தவம் செய்யப்பட்டு தவத்தின் பயனுக தவம் செய்தவர்களுக்கு அருள் பாலிக்கும் வகையில் உருவத்துடன் எழுந்தருளியதே இன்றைய கிராம, நகர க்ஷேத்திரங்கள்!

விவசாயத்தில் பயிர் நன்ருக வளர வேண்டுமென்ருல் விவசாயம் செய்யும் சமயத்தில் விவசாய பூமியிலுள்ள களைகளை அவ்வப்போது எடுப்பார்கள். ''களை எடுத்தல்'' என்று அதற்குப் பெயர். அப்படி களை எடுக்காவிட்டால், பயிரை, வளர விடாமல் பல செடிகள், பூச்சிகள் சேர்ந்து கொண்டு பயிரை அழித்துவிடும். பயிர் நன்ருக இருக்க நாம் போடக் கூடிய உரம் முதலியவைகளை களையே சாப்பிட்டு விட்டு பயிரை வளர விடாது. ஆகவே பயிர் நன்ருக வளர்வதற்கு உரம் முதலியவைகள் போடுவது எவ்வளவு அத்யாவசியமோ அதற்கு மேல் களை எடுப்பது முதலிய வைகள் அத்யாவசியமானது. இதுபோல் தான் இந்த உலகத் திலுள்ள மக்களெல்லாம் நன்ருக வாழ வேண்டுமென்ருல், மக்கள் சமுதாயத்திலுள்ள தீமைகளை அகற்ற வேண்டும். மக்கள் சமுதாயத்திற்கு நல்லவைகளையும் அருளவேண்டும். இதைச் செய்பவர்கள் தான் இறைவன் திருவருள் பெற்றவர் களாக கருதப்படுகிருர்கள். சில சமயம் இறைவனே இந்தப் பணியைச் செய்வதற்கு அவதாரம் எடுக்கிருர்; ஆகவேதான் இந்து சமயத்தில் இறைவனுடைய கைகளில் பலவகையான ஆயுதங்கள் வைத்திருப்பது புலப்படும். இறைவன் மூலமாக தீமைகள் அழிக்கப்பட்டு, நல்லவைகள் வளர்வதற்கு அருள்

பாலிக்கும் நோக்கத்துடன் கையில் ஆயுதங்களும், அபய ஹஸ்தமும் இருக்கின்றன,

மனிதகுலம் உய்வதற்கு இறைவழிபாடு செய்வது இன்றியமையாதது!...இறைவன் ஒருவன்தான் மனித வர்க்கத்தினுடைய வியாதிகளையும், கவலைகளையும், துன்பங்களையும் குறைக்கக் கூடியவர்—அகற்றக் கூடியவர். இறைவனை நாம் பல வழிகளில் வழிபடலாம். அவைகளுள் மிகவும் உயர்ந்ததும் சுலபமானதும் தாயாக, தேவியாக வழிபடுவதே!

தாயாருக்கு குழந்தைகளிடம் கருணையுமுண்டு, கண்டிப்புமுண்டு. தாயார் குழந்தைகள் கேட்கும் பொருள்களையெல்லாம் கொடுத்துவிட மாட்டாள். குழந்தைக்கு எது நல்லதோ அவைகளை மட்டும் கொடுப்பாள் அதுபோல இறைவனை தாய் வடிவமாக—தேவி வடிவமாக வழிபாடு செய்யும் பொழுது, நம்முடைய உலக வாழ்க்கைக்கு—மனித வாழ்க்கைக்கு தேவையான மழை முதல் மன அமைதி வரை எல்லாவித பொருள்களையும் மனித சமுதாயத்திற்கு ஏற்றவாறு அருள் பாலிப்பவர் இறைவன்!

சந்திரனுடைய ஒளி எல்லோருக்கும் பொதுவாகக் கிடைக்கக் கூடியது. ஆனால் குடிசையிலோ, கட்டிடத்திலோ உள்ளே இருந்தால், அந்த சந்திர ஒளியானது உள்ளே இருப்பவர்களுக்கு உபயோகமாவதில்லை. அதுபோல இறைவனுடைய அருள் எல்லோர்க்கும் பொதுவாக சமானமாக இருந்தாலும், அந்த இறை அருளைப் பெறுவதற்கு மக்கள் நல்ல தகுதியைப் பெற வேண்டும். மக்களெல்லாம் கடவுள் பக்தியுடனும், நல்ல எண்ணங்களுடனும் வாழ்ந்து வந்தால் அது இறைவனுடைய அருளைப் பெறுவதற்கு தகுதி பெற்றவர்களாக ஆக்கும். அப்படி இல்லையெனில் அந்த இறை அருளால் அவனுக்கு யாதொரு பிரயோசனமும் ஏற்படாது.



30, 12, 1981 அன்று காயாமொழி முப்புராதி அம்மன் கோயிலுக்கு சங்கராச்சாரியார் சுவாமிகள் விஜயம் செய்த போது, கோயில் அக்தார் ஆ சிவந்தி ஆதித்தன், ராமசாமி ஆதித்தன் ஆகியோர் வரவேற்ற காட்சி.

பழங் காலம் முதல் இறைவனை ஜோதி வடிவமாகவும், தீப சொரூபத்திலும் வழிபடுவதும் உண்டு. நம்முடைய பாரத தேசத்தில் தென் கோடியில் தேவி கன்னியா குமரி யாகவும், வடகோடி காஷ்மீரில் தேவி வைஷ்ணவிதேவி யாகவும், அஸ்ஸாமில் காமாக்கியா தேவியாகவும், பூரியில் விமலாதேவியாகவும்துவாரகையில் காளிமகாதேவியாகவும் குஜராத்தில் அம்பாஜி தேவியாகவும், உஜ்ஜயினியில் மஹாகாளி தேவியாகவும். காசியில் விசாலாக்ஷி தேவியாக வும், காஞ்சியில் காமாட்சியாகவும் மதுரையில் மீனாக்ஷி தேவியாகவும், இப்படி அநேக இடங்களில் அநேக பெயர் களுடன் ஆங்காங்கே தேவி அருள் பாலித்துக் கொண்டு வருகிறாள்.

இந்த வகையிலே நெல்லை மாவட்டம் காயா மொழிக் கிராமத்தில் அருள் பாலிக்கும் முப்புராதி அம்மன் ஸ்தல புராணமும் பக்தி பாடல்களும் கொண்ட ''அம்மன் அருள் தரிசனம்'' என்ற புஸ்தகம் திரு. பா. இராமச்சந்திர ஆதித்தன்மூலமாக வெளியிட இருப்பது கேட்டு சந்தோஷிக் கிறோம்.

30.12.81 தேதி அன்று, நாங்கள் காயாமொழியில் இந்த கோவிலுக்குச் சென்று அம்மனையும் தரிசித்து அங்கு அன்று நடைபெற்ற ஆயிரக்கணக்கான பெண் மணிகளைக் கொண்டு நடைபெற்ற தீபபூஜை முதலியவைகளையும் நேராகக் கண்டு மகிழ்ச்சி அடைந்தோம்.

இந்தக் காலத்தில் உலகியலில் எல்லா வகையிலும் கூட்டுறவு சொசைட்டி வந்துள்ள இந்த நிலையில் மனித சமுதாயம் உய்வதற்கும், இறை அருளைப் பெறுவதற்கும் கூட்டுறவு வழிபாடு மிகவும் அவசியமானது.

ஆகவே எல்லா அன்பர்களும் இது போன்ற கூட்டுறவு வழிபாடுகளில் அதிகமாக ஈடுபட்டு, இறை அருளைப் பற்றிச் சொல்லக் கூடிய ஸ்தோத்திர நூல்களையும் பாரா யணம் செய்து எல்லா மக்களும் இறையருள் பெற வேண்டு மென்று ஆசீர்வதிக்கிறோம்.

*22-6-1982*

நாராயண ஸ்மிருதி





கோயிலின் மேற்புறத்தில் உள்ள
ஆதித்த விநாயகர் கோயில்

# கோயில் தல புராணம்

எல்லா ஊர்களிலுமே 'கிராம தேவதை' என்றிருப்பது போலவே காயாமொழிக் கிராமத்திலும் முப்புராதி அம்மன் கிராம தேவதையாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிருள்.

இந்த ஆலயத்தை முதன் முதலாகஅமைத்தவர், ஸ்ரீமதி ''வெள்ளையம்மை'' நாச்சியார் ஆவார். அதாவது பஞ் சாதித்தன் என்ற மருத ஆதித்தனின் தாயார்.

மற்றக் கிராமங்களிலிருக்கும் அம்மன் விக்ரகங்களை விட, காயாமொழி முப்புராதி அம்மன் சிலாரூபம் மிகவும் சிறப்பானதாகும்.

ஏன் என்ருல் அஃது திரிபுர சுந்தரிமூர்த்தம் கொண்ட தாகும். அதாவது மூன்று முகங்கள் கொண்டவளாகும். திரிபுர சுந்தரி என்ற நாமம் ஏன் வந்ததென்ருல், தெய்வ கன்னியர் மூவரால், தவத்தின் மூலம் பெற்றெடுக்கப்பட்ட தாரகாட்சன், வித்தின்மால், வாணன் என்ற மூவரும் கொடிய தவம் செய்து ஈஸ்வரனிடத்தில் எல்லா வரங் களையும் பெற்று. தங்கக் கோட்டை, வெள்ளிக் கோட்டை, செம்புக் கோட்டை என்று மூன்று கோட்டைகளையமைத் தார்கள்.

இந்த மூன்று கோட்டைகளுக்குத்தான்திரிபுரம் அல்லது முப்புரம் என்று பெயர். இந்தக் கோட்டைகளைக் கட்டி அரசாட்சி நடத்தியதாலேயே அந்த மூவருக்கும் திரிபுவனுதி கள் அல்லது முப்புராதியர் என்று பெயர். கோட்டைப் பாதுகாப்புப் பரிபாலனத் தெய்வம் திரிபுரசுந்தரி. இவள் உமாதேவியாரின் வியர்வையில் ஜெனித்தவளாகும். முப்பு

ராதியர் வணங்கி வந்ததாலேயே அவளுக்கு ''முப்புராதி அம்மன்'' என்றும் ''திரிபுர சுந்தரி'' என்றும் பெயர் வந்தது.

இது போக இந்தத்தாய்க்கு ''முப்பிடாரி'' என்றும் மக்கள் சொல்கிறார்களே, அஃது முப்பிடாரி, அதாவது மூன்றுதலைகளைக் கொண்டவள் என்றே பொருள்,

''முப்பிடாரி'' என்ற பெயரை ஆராய்ச்சி செய்த உலகத் தமிழாராய்ச்சிக் கழகத்தினர் கீழ்க்கண்ட விளக்கத்தையும் கூறுகிறார்கள். பீடு, அகற்றி ஆகிய இரு சொற்களும் சேரும்போது ''பிடாற்றி'' ஆகிறது. ஆணவம், காமம், மாயை ஆகிய மூன்றுபீடுகளையும் அகற்றுவதால் ''முப்பிடாற்றி'' என்று ஆயிற்று. ''முப்பிடாற்றி'' என்ற பெயர் நாளடைவில் ''முப்பிடாரி'' என்று ஆகி விட்டது. இவ்வாறு தமிழ் ஆராய்ச்சிக் கழகத்தினர் கூறுகின்றனர்.

ஆணவம். காமம், மாயை ஆகிய மூன்று பீடுகளையும் அகற்றுபவள் நம் அன்னை முப்பிடாரி.

திரிபுரம் எரி செய்த அச்சிவன் என்றும், முன்னை இட்ட தீ முப்புரத்திலே என்றும், புராணப்பாடல்களில் வருவதெல்லாமே இந்த மூன்று கோட்டைகளைப் பற்றியதே.

இந்த முப்புராதி அம்மனையே எல்லா மக்களும் கிராமப் பாதுகாப்புத் தேவதையாகக் கொள்கிறார்கள் என்றால், அந்த முப்புராதியர்கள் வரமும் பெற்று, 108 சிவலிங்கங்களையும் தினமும் முறை தவறாமல் பூஜை செய்து கொண்டு, செயல் முறை பூராவும் தேவர்களுக்குக் கொடுமை இழைப்பதே விளையாட்டாகக் கொண்டதின் காரணமாக எல்லா தெய்வங்களின் கோபத்திற்கும் ஆளாகியும் கோட்டைக் காவலாக இருந்த இந்த தாயின் அருள் இவர்கள்பால் இருந்ததால் எந்த சக்தியாலும் அவர்களை எதுவுமே செய்ய முடியவில்லை. அக்கிரமம் தாங்க முடியாமல், முப்புராதியர்



முப்புராதி அம்மன் கோயிலின் முன் முகப்புத் தோற்றம்

களுடன்போருக்கனுப்பப்பட்ட விநாயகர், முருகன், சூரியன் ஆகியவர்களை எல்லாம், அவர்களுக்குகந்த உபசரணைகளை செய்து கோட்டையிலேயே தங்க வைத்துவிடுவார்கள் அந்த திரிபுவனுதிகள். இந்த செய்தியைக் கேட்ட பரம சிவனுக்குக் கோபம் வந்ததில் ஏற்பட்ட வியர்வைத் துளியி லிருந்து ''வியர்வை புத்திரர்'' (வீரபுத்திரசாமி) தோன்றி னார். அவரை அனுப்பித்தான் முன்பு சென்ற விநாயகர் முருகன், சூரியன் மூவரையும் மீட்க முடிந்தது. முப்புராதி யர் பெற்றிருந்த ஆயுள் வரத்தின் நாள் நெருங்க நெருங்க முப்புராதி அம்மனின் எச்சரிக்கையான சொல்லை மீறி நடக்க லானார்கள். அப்படியிருந்தும் முப்புராதி அம்மன்கோட்டைக் குள் இருக்கும்வரையும் கோட்டையையும் அவர்களையும் எதுவுமேசெய்ய முடியாதென்பது தெளிவுபட்டது. ஆகவே ''முப்புராதியை'' கயிலைக்கு வரும்படி ஒரு சூழ்ச்சி செய்து அவள் இல்லாதபோது மும் மூர்த்திகள் உள்பட எல்லாத் தேவர்களும் போய் போரிட்டுக் கடைசியில் சிவன், திரி புரக் கோட்டையை அக்கினியால் அழித்தார். முதலில் திரி புர யுத்தத்தில் சிவனுக்கு உதவிய 'வில்' தான் சிவதனுசு என்று சொல்லப்படுவது. அந்த சிவதனுசுதான் ஜனகமாக ராஜனிடம் வந்து சீதையை மணப்பதற்குப் பணயமாக வைக்கப்பட்டு ஸ்ரீராமனால் முறிக்கப்பட்டது. இராமர் சீதையை மணந்தார். ஆனால் இந்த சிவதனுசு எப்படிஜனக மகாராஜன் வசம் வந்தது? என்பதற்கு சாஸ்திர ஆதாரங் கள் கிடைக்கவில்லை.

முப்புராதி அம்மன் முப்புராதியர்களையும், அவர் கள் அரசாட்சி நடத்திய கோட்டைகளையும் காத்துக் கொண்டு இருந்தாள் என்றதாலேயே தொன்று தொட்டுக் கிராம மக்கள் முப்புராதி அம்மனையே தங்கள் கிராம தேவதையாக வணங்கும் சம்பிரதாயம் ஏற்பட்டுள்ளது.

இந்த நிலையில் காயாமொழி முப்புராதியம்மன் மிகவும் சக்தி வாய்ந்தவள் என்று யாவராலும் கருதப்படுவது ஏனென்றால் அவளை, ஸ்தாபனம் செய்த தாயார் வெள்ளையம்மை நாச்சியாரும், அவர்கள் சந்ததியர்களாகிய நமது மூதாதையர்களும் தொன்று தொட்டு மிக மிகப் பக்தியுடன் கூடிய ஏகாக்ர சித்த நிலையில் வழிபட்டு வந்ததாலேயே அவள் மிகவும் சக்தி வாய்ந்தவளாகத் திகழ்கிறாள். சக்தி மிக்க அந்த அன்னையின் அநுக்ரஹம் பெற்ற கிராம மக்கள் யாவரும் இன்றளவும் அவளை மிக்க மனத் தூய்மையுடன் வணங்கி வருவதாலேயே அவளுடைய ஸாந்நித்யம் மாற்றுத நிலையில் வளர்ந்தோங்கி வருகிறது.

மகா ராஜா ஆதித்தன் என்ற
துரைராமசாமி ஆதித்தன்,

# ஆலய அமைப்பு

திருச்செந்தூரிலிருந்து பத்து கிலோ மீட்டர் தூரத்தில், தளவாய்புரம் வழியாக பரமன்குறிச்சி செல்லும் சாலையில் அமையப் பெற்றது, காயாமொழி.

ஊரின் தொடக்கத்திலே, மகுடம் போல, வடக்கு நோக்கி நிற்கும் முப்புராதி அம்மன் கோயில் பார்த்தோர் உள்ளத்தைப் பக்திப் பரவசத்தில் ஆழ்த்தும் தெய்வ கோட்டமாகத் திகழ்கிறது.

கலையழகு மிக்க இக்கோயிலின் முன்பு சி. பா. ஆதித்தனார் மகாமண்டபமும், மேற்புறத்தில் 'ஆதித்த விநாயகர் சன்னதியும் மண்டபமும், திருமதி சரஸ்வதி அம்மாள் கலை அரங்கமும், மேற்த எல்லையில் அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய தோரணவாயிலும்கோயிலுக்கு எழில்சேர்க்கின்றன.

கோயில் மூலஸ்தான பீடத்தில் தாய்முப்புராதி கொலுவீற்றிருந்து—தாழ்பணிந்து வணங்கும் பக்தர்களுக்கு சகல சௌபாக்கியங்களும் தந்து அருள் பாலித்துக் கொண்டிருக்கிறாள்.

மூலஸ்தானத்திற்கு அடுத்த மண்டபத்தின் இடது பக்கத்தில் வீரபுத்திரசுவாமி இருக்கிறார். வெகு காலமாக சுவாமி சிலை இல்லாமலேயே இருந்தது. இது ஒரு பெருங் குறையாகவே கருதப்பட்டது.

துரை ராமசாமி ஆதித்த நாடார் அவர்கள் (பிறப்பு சுமார் 1850ம் ஆண்டு) சுகவீனமுற்றபோது சுவாமி சிலை பிரதிஸ்டை செய்வதாக நேமிசம் செய்து கொண்டார்கள். சுகமானதும், தனது உயரத்தை அளவெடுத்துக் கொடுத்து அதே அளவில் சுவாமி சிலை கல்லில் செதுக்கி பிரதிஸ்டை செய்தார்கள்.

வலதுபுறம் காவல் தெய்வமாக வைரவர் இருக்கிறார்

முப்புராதி அம்மன் சன்னதிக்கு கிழக்கே மடப்பள்ளிக்கு அடுத்தாற்போல் மாரியம்மன் சன்னதி இருக்கிறது. பல ஆண்டுகளுக்கு முன்பு இந்த சன்னதி புதிதாக கட்டப்பட்டது. வெகு காலமாக அங்கு சிலை இல்லாமல், சித்திரம் மட்டுமே வரையப்பட்டிருந்தது. பின்னர் மேல வீட்டு ஆதித்த நாடார்கள் சேர்ந்து மாரியம்மன் சிலையை அங்கே பிரதிஸ்டை செய்தார்கள்,

மாரியம்மன் சன்னதியிலேயே, முன்னால் மேற்புறச் சுவரில் நடராஜர் சித்திரமும், கீழ்ப்புறச் சுவரில் பத்திர காளி சித்திரமும் வரையப்பட்டிருந்தது. இப்போது அங்கு அந்தச் சித்திரங்கள் இல்லையென்றாலும், படையல்போடப்பட்டு தீபாராதனை செய்து அருப வழிபாடு நடைபெற்று வருகிறது.

கோயிலின் கீழ்புறம், மேற்கு நோக்கி பார்வதிஅம்மன் சன்னதி இருக்கிறது. பா. பார்வதி ஆதித்த நாடார் (பிறப்பு 1882) இக்கோயிலைக் கட்டினார்.

பார்வதி அம்மன் சன்னதிக்கு தெற்கேசுடலை மாடனுக்குத் தனியே ஒரு சன்னதி பரண் அமைப்பில் இருக்கிறது.

# கட்டிடத் திருப்பணிகள்

மூலஸ்தானமும், அதை அடுத்து வீரபுத்திர சுவாமி இருக்கும் மண்டபமும் மிகவும் புனிதமான பகுதி. இங்கு பக்தர்கள் செல்வதில்லை. இப்பகுதியை ஸ்ரீமதி வெள்ளை யம்மை நாச்சியார் (சுமார் 1650ம் ஆண்டு) கட்டினார்கள்.

அம்மன் கோயிலுக்குப் பாத்தியப்பட்டிருந்த குளத்து மேற்பார்வையை துரை ராமசாமி ஆதித்த நாடார் கவனித்துவந்தபோது, ஒரு வருடம் குளத்து வாளை மீன் பெருக்கம் ஏராளமாக இருந்தது. அதை விற்ற பணத்தில் இருந்து (சுமார் 1850ம் ஆண்டு) வீரபுத்திரர் மண்டபத்திற்கும் பலிபீடத்திற்கும் இடையிலுள்ள மண்டபம் கட்டப்பட்டது.

பலிபீடம் இருக்கும் மண்டபம் யாரால் கட்டப்பட்டது என்ற விபரம் தெரியவில்லை. ஆனால், அந்தப் பகுதி மிகவும் பழுதடைந்திருந்ததைக் கண்ட தங்கையா நாடார் அவர்கள் தன் கடையிலிருந்த மகமைப் பணத்தைக் கொண்டும், மற்ற ஆதித்த நாடார்களிடமிருந்துசில பனை மரங்களை நன்கொடையாகப் பெற்றும் (சுமார் 1925ம் ஆண்டு) புதுப்பித்தார்கள்.

அதற்கும் முன்னால் பாட்டாளி மண்டபம் இருக்கிறது. ஆண்டு தோறும் ஆடி மாதம் நடக்கும் அம்மன் கொடைத் திருவிழா சில காலம் ஆதித்த நாடார்கள் பங்கு விகிதாச்சாரப்படி நடந்து வந்தது.

அப்படி நடத்தி வரும்போது கொடையை முன்னின்று நடத்திய வடக்கு வீடு மேலத் தலைவாசல் சொர்ண ஜெய

பாண்டிய ஆதித்த நாடார் அவர்கள் சுமார் 1935ம்ஆண்டு வரி எழுதிய பிறகு, பதினைந்து நாட்களுக்குள், (திருச்செந் தூரைச் சேர்ந்த ஆறுமுகம் பண்ணையார் என்ற கொத்தனு ரைக் கொண்டு)கட்டி முடித்தார்கள்.

இந்தப் பாட்டாளி மண்டபக் கூரை நாளடைவில் பழு தடைந்து விட்டது. இதையும், பலிபீடம் இருக்கும் பகுதி யையும் இணைத்து ஒரே கூரையாகப் போடுவதற்காக, ஆதித்த நாடார்களுக்கு ஒரு வரி பங்கு விகிதாச்சாரப்படி போடப்பட்டது. இதில் பாதிச் செலவை சி. பா. ஆதித் தனர் அவர்கள்ஏற்றுக் கொண்டார்கள்.

ஆலயத்தின் மேற்புறமாக கண்ணைக் கவரும் சிற்ப வேலைப்பாடுகளுடன் திகழும் ஆதித்த விநாயகர் மண்ட பத்தை, கோயிலின் முதல் திருப்பணியாக 1976ம் ஆண்டு சி. பா. ஆதித்தனரின் இளைய புதல்வர் சிவந்தி ஆதித்தன் அவர்கள் கட்டி, இந்த ஆதித்த விநாயக மண்டபத்தைத் தொடர்ந்து மேலும் கோயில் திருப்பணிகள் பல சிறப்பாக தொடர ஆரம்பம்செய்து வைத்தார்கள்.

பிரதான கோயிலுக்கு முன்னல் 'மகாமண்டபம்' உள்ளது. கலையம்சம் மிகுந்த தெய்வச் சிலைகளும், சித்திர வேலைப்பாடுகளும், உயர்ந்த அழகிய தூண்களும் நிறைந்த. பார்ப்பவர் மனதில் பக்திப் பிரவாகத்தை ஏற்படுத்துகிற இந்த மகாமண்டபம் மிகுந்த பொருள் செலவில் சி.பா ஆதித்தனர் அவர்களின் மூத்தபுதல்வர் திரு.இராமச் சந்திர ஆதித்தன் அவர்களால் 1981ம் ஆண்டு கட்டப்பட் டது. கோவிந்தம்மாள் ஆதித்தனர் பொது அறக்கட்டளை யின் சார்பில் இந்த மண்டபத்தை அவர் எழுப் பினர்கள். இந்த அறக்கட்டளையின் மற்ற அறங்காவலர்கள் ஆ. சிவந்தி ஆதித்தன், இரா. கண்ணன் ஆதித்தன் ஆகியோர். இந்த அழகிய மகாமண்டபம் கோயிலுக்கு கெம்பீரமான புதிய தோற்றத்தைக் கொடுக்கிறது.



சி. பா. ஆதித்தனார் மகாமண்டபத்தின் எழில் தோற்றம்



சி. பா. ஆதித்தனர் மகாமண்டபம் மேற்குவாயிலின்
கெம்பீரத் தோற்றம்.




கோயிலின் மேல்புறத்தில் நவீன வசதிகள் நிறைந்த சரஸ்வதி அம்மாள் கலையரங்கம்!

கோயில் திருவிழா சமயங்களில் கலை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள் நடத்த வசதியாக தன் தங்கை திருமதி சரஸ்வதி அம்மாள் நினைவாக, திருமதி சரஸ்வதி அம்மாள் கலையரங்கத்தை பல நவீன வசதிகளுடன் 15—8—1977ம் ஆண்டு சி. பா. ஆதித்தனார் அவர்களின் இளைய புதல்வர் சிவந்தி ஆதித்தன் அவர்கள் கட்டினார்கள். கலைநிகழ்ச்சிகளை காணக் கூடும் ஆயிரக்கணக்கான மக்தர்களை கவர்ந்து பரவசத்தில் ஆழ்த்தும் பொலிவுடன் இந்த கலையரங்கம் திகழ்கிறது.

ஆலயத்தின் மேற்கு எல்லையில் அமைந்துள்ள சிற்ப வேலைப்பாடு மிகுந்த அழகான தோரணவாயிலை மறைந்த புகழ் பெற்ற டாக்டர் எஸ். கண்ணன் ஆதித்தன் நினைவாக அன்னாரது தாயார் சுந்தர கல்யாணி அம்மாள் அவர்கள் இந்த 1982ம் ஆண்டில் கட்டியுள்ளார்கள்.

திருக்கோயிலுக்கு அழகு சேர்க்கும் முகப்பிலுள்ளவேப்ப மரச் சோலையையும் அகன்ற வீதியையும் பொதுநல நோக்கு கொண்ட திரு. மகாராஜா ஆதித்தன் அவர்கள் உருவாக்கி இருப்பது மகத்தான சாதனையாகும். திரு. கார்த்திகேய ஆதித்தனும் திரு. P.R ஆதித்தனும் (வாசகஆதித்தன்) இதற்கு உறுதுணையாக இருந்தார்கள்.





முப்புராதி அம்மன் கோயிலில் திருவிளக்கு
பூஜை செய்யும் பெண்களுக்கு சங்கராச்சாரியார்
சுவாமிகள் ஆசி வழங்கும் காட்சி,



திருவிளக்கு ஏற்றி பெண்கள் அன்னையை
வழிபடும் காட்சி

# பூஜைகள் திருவிழாக்கள்

**தினசரி பூஜை:**

அம்மனுக்கு தினமும் காலையிலும், இரவிலும் இரு காலப் பூஜை நடந்து வருகிறது. ஆதித்த நாடார்கள் அம்மனுக்கு எழுதி வைத்த நஞ்சை, புஞ்சை நிலங்கள் மற்றும் புளிய மரங்களிலிருந்து வரும் வருமானத்தைக் கொண்டு நித்திய பூஜைகள் நடந்து வருகின்றன. நிதிப் பற்றுக்குறை ஏற்பட்டால் ஆதித்த நாடார்கள் சபா வருமானத்திலிருந்து ஈடு செய்யப்படுகிறது.

**திருவிளக்கு பூஜை**

மாதாந்த செவ்வாய்க் கிழமை தோறும் நடக்கிற திருவிளக்கு பூஜை கண்கொள்ளாக் காட்சியாகும். மகா மண்டபத்தில் நூற்றுக்கு மேற்பட்ட பெண்கள் திருவிளக்கு கள் ஏற்றி பக்திப் பரவசத்துடன் அம்மன் மேல் பாடல்கள் பாடி; அன்னையை வழிபடுவது பரவச மூட்டுவதாக இருக்கும்.

1981 ம் ஆண்டு முதல் இந்தப் பூஜையைப் படுக்கப் பத்து திரு ஆறுமுகப் பாண்டியன் அவர்கள் முன்னின்று நடத்தி வருகிறார்கள். திரு பா. இராமச்சந்திர ஆதித்தன் அவர்கள் அதற்கான செலவை ஏற்றுச் செய்து கொண்டிருக் கிறார்கள்.

நவராத்திரி பூஜை:

ஒவ்வொரு இரவு பூஜையும் ஆதித்த வம்சத்தில் ஒவ்வொரு குடும்பத்தினர் பொறுப்பேற்று செய்து வருகின்றனர். ஒன்பது இரவு பூஜையும் ஒன்பது குடும்பத்தினர் நடத்தி வருகிறார்கள்.

இந்த நவராத்திரி பூஜை திரு சு. அழகானந்த ஆதித்த நாடாரவர்கள் (பிறப்பு 1819) முயற்சியால் ஆரம்பிக்கப் பட்டு தொடர்ந்து நடந்து வருகிறது.

அம்மன் கொடை:

அம்மனின் விழாக்களில் மிகவும் சிறப்பாக நடைபெறு வது அம்மன் கொடைதான்.

ஒவ்வொரு ஆண்டும் ஆடி மாதம் கடைசி செவ்வாய்க் கிழமை அன்று இந்த அம்மன் கொடை விழா நடை பெறு கிறது.

வெகு காலமாக செவ்வாய், புதன் ஆகிய இரண்டு நாட்கள் மட்டுமே கொடை நடந்து வந்தது. இப்போது ஞாயிற்றுக் கிழமை தொடங்கி வெள்ளிக்கிழமை வரை ஆறு நாட்கள் அதிவிமரிசையாக அம்மன் கொடை நடந்து வருகிறது.

ஆறு நாட்களும் வெவ்வேறு விதமான அலங்காரங்க ளுடன் அம்மன் திருக்காட்சி தந்து அருள் புரிகிறாள்.

செவ்வாய்க் கிழமை இரவு அம்மன் சப்பரத்தில் வீதி வலம் வருகிறாள்.

மேலதாளங்களுடனும், கரக ஆட்டத்துடனும் யானை முன் செல்ல, அம்மன் எழுந்தருளி திருவீதி உலா வருகிறாள்.

சுமார் 60 ஆண்டுகளுக்கு முன் திரு சங்கர ராமசாமி ஆதித்தன், திரு நாக பாண்டிய ஆதித்தன் இருவரும்

சப்பரம் செய்யும் பணியை முன்னின்று நிறைவேற்றி னார்கள்.

உற்சவ அம்மன் உருவச் சிலை இவர்களுடைய மேற் பார்வையில் ஏரலிலுள்ள ஸ்தபதிகளால் செய்யப் பட்டது.

சப்பரத்தோடு பஜனைப் பாடல்களும் பாடி வருவார்கள். திரு இராமசாமி ஆதித்தன் (ஆர். ஆர். ஆதித்தன்) அவர்கள் பஜனைப்பாடல்கள் பாடி வந்தார்கள். இப்போது அவரு டைய குமாரர்கள் தொடர்ந்து பாடி வருகிறார்கள்.

அம்மன் கொடை விழாவில் எட்டு நாட்களும் விரத மிருந்து, நோன்பு பிடித்து நேமிச கைங்கரியங்களை செய் வது சிறப்பான ஒன்றாகத்திகழ்கிறது. நோன்பு இருப்பவர்கள் இரண்டு விலாவிலும் தோலில் ஊசியால் குத்தி; நூல் கோர்த்து ''ஆகா ஹோ! ஐயா ஹோ!'' என்று பாடி கோயிலை வலம் வருவதும், மாவிளக்கு, ஆயிரங்கண் பானை, முளை ஆகியவற்றை எடுத்து வருவதும் சிறப்பாக நடை பெறும்.

முந்திய காலங்களில் புதன் கிழமை கடா வெட்டி பலி கொடுத்து வந்தார்கள்,

திரு சி. பா. ஆதித்தனார் அவர்கள் சட்டசபை உறுப் பினராக இருந்தபோது, அவர்களால் தனியார் மசோதா வாகக் கொண்டு வரப்பட்டு ஆலயங்களில் பலியிடுதல் சட்ட பூர்வமாக தடை செய்யப்பட்டது.

அதன் பிறகு நமது அன்னைக்கு தடியங்காய் வெட்டி சைவப்பலி கொடுக்கப்படுகிறது. புதன் கிழமை இரவு கணி தன் கூத்து நடைபெறுகிறது. தஞ்சை மாவட்டத்தில் உள்ள பழையனூரில் முற்காலத்தில் வாழ்ந்த ''நீலி'' ஒருத்தியின் கதையைக் கணிதர்கள் ஆடிப்பாடிக் கூறுவார் கள். விடியும் வரை இது நடைபெறும்.

# முப்பாத்தி அம்மன் கும்மி

மகாகவி அ. கு. ஆதித்தர்



ஊரின் முதல் தெய்வம் முப்பிடாரி—அவள்
ஊரையும் நாட்டையும் காக்கின்றவள்
சீரும் சிறப்பும் தருகின்றவள்—மிக்க
செல்வம் கொழிக்கவே செய்கின்றவள் (ஊரின்)

காஞ்சி புரத்தினில் காமாட்சி—அவள்
காசிப் பதிக்கு விசாலாட்சி
கூடல் நகரில் மீனாட்சி—எங்கள்
காயாமொழிக்கு முப்பிடாரி (ஊரின்)

வானம் தவறாமல் பொழியவைப்பாள்—அவள்
வயலில் மேனிவிளைய வைப்பாள்
தான தருமங்கள் தழைக்க வைப்பாள்—அவள்
தலத் தாரைநனி வாழவைப்பாள் (ஊரின்)

பட்டும் பணியும் அணிந்திடுவாள் — அவள்
பக்தர்கள் காணிக்கை ஏற்றிடுவாள்
கொட்டி முழக்கி விழாக் காண்பாள் — அவள்
கொடுத்து மகிழ்ந்து கொலு இருப்பாள் (ஊரின்)

பட்டப் பகல்போல சந்நிதியாம் —அங்கு
பக்தர்கள் பாடல் முழக்கங்களாம்
சப்பரத் தில்வீதி வருபவளாம் — பக்தர்
சார்த்தும் திருக்கண் ஏற்பாளம் (ஊரின்)

கோடிப் பக்தர்கள் கூட்டத்திலும் — அவள்
கோடாது இன்முகம் காட்டுவாளாம் — வாண
வேடிக்கை பார்த்து, வாத்தியங் கேட்டு
வரங்கள் கொடுத்து மகிழ்வாளாம் (ஊரின்)

ஆயிரங் கண்பானை, மாவிளக் குப்பெட்டி
ஆடி விரதத் தெடுப்பார்க்குத்
தாயினும் மிக்க அன்புடையாள் — நலம்
தந்துகாப் பாற்றும் தயையுடையாள் (ஊரின்)

எக்குலம் எவ்வினம் "என்றுபாராள் — அவள்
யாவர்க்கும் தாயாய் இதம் புரிவாள்
பக்கத்தில் வந்து தேங்காய் பழம் வைத்துப்
பணிவார் பலர்க்கும் அருள்புரிவாள் (ஊரின்)

மஞ்சள் குங்கும அலங்காரி — மேனி
சந்தனம் மணக்கும் சிங்காரி—இள
வஞ்சியர் முளைப்பா லிகை நேர் வைத்து
வணங்கும் காட்சிகொள் ஒய்யாரி (ஊரின்)

வில்லுப் பாட்டும் கேட்டிடுவாள்—கலை
வாணர்கள் கூத்தும் பார்த்திடுவாள்
சொல்லும் பழைய நீலி கதையினைச்
சுவைத்துச் சித்தம் மகிழ்ந்திடுவாள் (ஊரின்)

கயிறு சுற்றி ஆடுவார்கள்—அண்டை
கூட்டிப் பொங்கல் இடுவார்கள்
பயிர்கள் செழிக்க மழைபொழியத்—திரு
மாலைப் பூசனை போடுவார்கள் (ஊரின்)

கேட்ட கேட்டவ ரந்தருவாள்—அவள்
கேடு வராமல் பாதுகாப்பாள்
நாட்டையும் ஊரையும் செழிப்பாக்க—அவள்
நல்லன யாவும் தந்துநிற்பாள் (ஊரின்)





கோயிலுக்கு மேற்கு எல்லையில் அமைந்துள்ள
டாக்டர் கண்ணன் ஆதித்தன் நினைவு
தோரணவாயிலின் வரைபடம்.

# அம்மன் அருள் தரிசனம்

அருள்மிகு அன்னை காயாமொழி
முப்புராதி அம்மன் தாயின்
அருள்பெற்று இயற்றியவர்

கவிஞர். க. குழந்தைவேலன்



சப்பரத்தில் எழுந்தருளும் உற்சவ
அம்மனின் அருள் தோற்றம்.



## விநாயகர் துதி

ஆதித்த விநாயகரே!
அருள் வடிவே வந்தருள் வாய்!
அரசமரப் பிள்ளையாரே!
ஆனைமுகம் கொண்டவரே!

சோதி முகத்தழகே!
தொந்திக் கணபதியே!
தும்பிக்கையால் தமிழ் எழுதி
சுயமாகப் பாட வைப்பாய்!

நீதிக் களஞ்சியமே!
நித்திலமே வந்தருள் வாய்!
செந்தூரின் முருகன் அண்ணா!
திருவருளே ஞான மன்னா!

ஓதி உலகளந்த
உத்தமனே! காயாமொழி
முப்புராதி அம்மன் அருள்
துதிபாட அருள் புரிவாய்!



# முருகன் துதி

சேவற் கொடியோனே!
திருமால் மருகோனே!
தேர்வழங்கி ஆதித்தர்கள்
தினம் வணங்கும் முருகோனே!

கோயில் கட்டி மானியங்கள்
கொடுத்தஆ தித்த வம்சம்
கொண்டாடும் பாலகனே!
கோலமயில் வேலவனே!

தேவர்களை சிறை மீட்டி
சிவகுருவாய் ஆனவனே!
சிங்கார மலை தோறும்
திருக்கோயில் கொண்டவனே!

காயாமொழி முப்புராதி
தாயின் புகழ் நான் பாட
ஞானத்தமிழ் தாருமய்யா!
நான் வணங்கும் ஆண்டவனே!

# சரஸ்வதி துதி

இனிக்கும் மொழி வடிவே!
எந்தமிழே கலை வாணி!
இதயத்தை அரசாளும்
என் நாவின் மகராணி!

மணக்கின்ற சொல்லெடுத்து
மயக்குகின்ற பொருளுரைப்பாய்
மண்ணுலகு வியக்கும் புது
மகிமைகளை கவியில் வைப்பாய்!

நுணுக்கமுள்ள நூலறிவே
உலகியலின் சூட்சமமே!
உள்ளக் கண்கள் நீயம்மா!
உண்மை அன்பு தாயம்மா!

தனக்குவமை இல்லாத
காயாமொழி முப்புராதி
தாயின் புகழ் நான் பாட
தமிழ் தருவாய் கலைத்தேவி!

# அவை அடக்கம்

அம்மாங் கடல் நீரில்
அறிந்தது நான் ஒரு துளியே!
அறிவினிலே தெரிந்ததெல்லாம்
'அம்மா'யெனும் உணர்வே!

அம்மாவின் கால் தழுவி
அரிச்சுவடி கற்று தமிழ்
'அம்மா' யெனும் குழவி
அடியேன் சிறு மழலை!

'அம்மா' யென அழைக்க
அருந்தமிழில் ஒரு வார்த்தை
அன்புடனே கற்ற பிள்ளை
ஆசையுடன் பாடும் கிள்ளை!

பெம்மான் பெரும்புலவீர்
பேருபெற்ற தமிழறிஞர்
பேசுவது குழந்தை மொழி!
பிழை பொறுத்து அரவணைப்பீர்!

# காயாமொழி

மங்கல முழங்கும் எழிலோ!
மயனார் அமைத்த புரியோ!
மண் மகள் வதனப் பொலிவோ!
வானவர் மயங்கும் அழகோ!

குங்குமக் கோயில் காட்சியோ!
குலமகள் கற்பு மாட்சியோ!
குவலயம் புகழும் உண்மையோ!
குறைவிலா அன்பு நன்மையோ!

எங்கும் இனிமைப் பூக்களோ!
இதயத்தின் செந்தமிழ் பாக்களோ!
திருமகள் வாழ்கிற கோட்டமோ!
தெய்வத் திருவருள் தேட்டமோ!

பொங்கிடும் பூரிப்பு இன்பமோ!
புண்ணிய பூமி திலகமோ—என
பூத்தது சொர்க்கம் தரையிலே!
காயாமொழி எனும் பெயரிலே!

வண்டாடும் பூஞ்சோலை!
வாசமுள்ள நந்த வனம்!
வானை முட்டும் பனை மரங்கள்!
வன மெங்கும் உடை மரங்கள்!

செந்தூர வண்ண நிறம்
நிலமகளைத் தழுவுதம்மா!
தென்றல் தொட்டு சீராட்ட
காயாமொழி மகிழுதம்மா!

திண்ணை களும் முற்றங் களும்
தெருவெங்கும் சவுக்கைகளும்
தேவலோகச் சிறப்பெல்லாம்
நின்ருட்சி செய்யுதம்மா!

கண்ணை மயக்குகின்ற
களிப்பூட்டும் மாளிகைகள்!
கம்பன் கண்ட அயோத்தியென
காயாமொழி ஆனதம்மா!

## ஆதித்த வம்சம்

அங்கே—

கருணையே கரங்களாக!
தரணியை இயக்கும் வெய்யோன்
தனியருள் மகிமையாக
தமிழ் வம்சம் வளர்ந்த தம்மா!

நறுந்தமிழ் நலமே சூழ!
ஞாயிறாய் வளமாய் வாழ!
ஆதவன் தோற்று வித்த
ஆதித்த வம்சம் தன்னில்—

திருமிகுமே னாடு ஆண்ட
ஆதித்த நாடன் ராணி!
திருப்பேரை வழுதி நாடர்
திருமகள் வெள்ளையம்மை!

மருத ஆ தித்தர் தாயாம்
மங்கலச் செல்வி ஆச்சி!
மானாட்டு ராணி நாச்சி!
கனவொன்று கண்டாரம்மா!

தேதியில் மழை பொழியும்
திருப் பொன்னிகா, விரி யாறு!
தினம் பாய்ந்து வளம் கொழிக்கும்
செந்தமிழ் சோழ நாட்டின்

ஆதித்த ராஜ வம்சம்
ஆனைபலம்! அழகுமன்னர்
காயாமொழி நாடுவந்தார்!
அரசாட்சி செய்ய வென்றே!

நீதியே தர்ம மாக!
நெறிமுறையே கொள்கையாக!
தீதிலா அரசாய்த் திகழ்ந்த
திருப்புகழ் காயாமொழி!

சாதனை பெருமை பாட
தமிழிலே வார்த்தை இல்லா(த)
அளவுக்கு சாகசங்கள்
காயாமொழி நாட்டில் உண்டு!

## கனவில் அம்மன் தோன்றுதல்!

தேவி வெள்ளை யம்மை நாச்சி
திருக் கனவில் தோன்றிய தோ!
திரிபுரத்தை காக்க—உமா
தேவியம்ச மான தெய்வம்!

தேவகன்னி மூவர்களின்
திருத்தவத்தில் உதித்தவளாம்!
'தெய்வ ஞான' செல்வர்களின்
நெஞ்சமர்ந்த வீர தெய்வம்!

காவல் தெய்வம்! காயாமொழி
காக்கும் தெய்வம் நானே தான்!
தங்கம் வெள்ளி செம்புக் கோட்டை
காக்க வந்த சுந்தரி நான்!

கோயில் கட்டி கும்பிடென்று
குலமகளும் அருள் கொடுத்தாள்!
குலமங்கை வெள்ளை நாச்சி
உளமகிழ்ந்து கையெடுத்தாள்!

ஊரணிக் கரை மேலே!

உயர்ந்த புற்றுக் கண்ணுக் குள்ளே!

பூந் தென்றல் மலர் சொரிய!

உருவாகி எழுந்த துர்க்கை!

கௌமாரி அம்மனுக்கு

ஆலயம் எழுந்த தம்மா!

காயாமொழி பட்டணத்தில்

தாய் காட்சி தந்தாளே!

பூரண கும்பம் வைத்து

புதுசதுர்க்கை தானும் கட்டி

கோயில் எழுந்ததம்மா!

குலமகளாம் முப்புராதிக்கு!

தேரடிக் கறுப்பு என்னும்

திருச்சுடலை மாடனுமே!

பரண்மேல் அமர்ந்தாரே!

பலிபீடம் தான் பார்த்து!

மூன்று சிரசுடைய

முப்புராதி சக்தி அம்சம்!

வலப்புறமோ ஆங்காரம்!

இடப்புறமோ சுபசாந்தம்!

காண்பதற்கு நேர் முகமோ

கருணை பொங்கும் ஏகாந்தம்!

காலடியில் இடது பக்கம்

கர்ஜிக்கும் வீரசாமி!

ஆண்மையுள்ள பைரவரும்

அம்பாளின் வலது பக்கம்!

அழகுத்தேர் உற்சவம்மன்

திரிபுரத்தி முன்னாலே!

வானுலகும் மண்ணுலகும்

வந்தமர! சுப நாளில்

காயாமொழிப் பதியினிலே!

சக்திவந் தமர்ந் தாளே!

ஒளி முழுதும் சுடராக
உருவாகி ஜொலிக்கும் சக்தி!
ஒலி வடிவம் உயிர் பெற்று
குரலாகும் நாத சக்தி!

உலகத்தின் அழ கெல்லாம்
ஒன்ருகித் தோன்றும் சக்தி!
முழுகடல் நிதியனைத்தும்
உருவாக்கும் மகாசக்தி!

பலபல வள, நலமுழுதும்
மண்ணுக்குள் வைத்த சக்தி!
கலை பல விளை விக்கும்
கருணையே மகா சக்தி!

கலியுகம் தனில் திரு
காயாமொழி யான சக்தி!
கைகூப்பி வணங்குகிருேம்!
அருள் தருக மகாசக்தி!

துணிவையும் வலிமையும்
தோளுக்கு தந்த சக்தி!
சுகத்தோடு செல்வமும்
வழங்கிய மகாசக்தி!

இனிமையும் அறிவையும்
இதயத்தில் வைத்த சக்தி!
பிணியிலா பெருவாழ்வு
வரம்தந்த மகாசக்தி!

கனிவையும் அழகையும்
முகத்துக்கு தந்த சக்தி!
கம்பீரம் தந்தாண்மை
காக்கிற மகாசக்தி!

பனிமலர் சிரிப்பாட்சி!
செய்கிற சிவ சக்தி!
காயாமொழி யூர்திகழும்
மூப்புராதி மகாசக்தி!

நினைத்ததை செயலாக்கும்
நித்தியமே நின் சக்தி!
நியாயத்தை நிலை நாட்டும்
சத்தியமே உன் சக்தி!

மனப்பயம் சஞ்சலம்
மாற்றிடும் உன் சக்தி!
வழிப்பயணம் தடையின்றி
நடத்திடும் உன் சக்தி!

அணைபோட்டு கர்ம வினை
அகற்றிடும் நின் சக்தி!
அன்னையாய் நின்றுலகை
உருவாக்கும் உன் சக்தி!

தனக்குவமை இல்லாத
காயாமொழி அருள் சக்தி!
கௌமாரி எமை ஆளும்
முப்புராதி மகாசக்தி!

சக்தியும் நீயே! சகலமும் நீயே!
சர்வமும் நீயே ஜெயசக்தி!
காஞ்சியில் நீயே காமாட்சி!
காசியில் நீயே விசாலாட்சி!

வங்கத்தில் நீயே மாகாளி!
மதுரையில் நீயே மீனாட்சி!
மயிலையில் நீயே கற்பகத்தாய்!
மருவத்தூரில் நீ பராசக்தி!

கொல்லூர் தலத்தில் லிங்கநாயகி!
கூடலூர் மலையில் கண்ணகித்தாய்!
நெல்லையில் நீயே காந்திமதி!
திருவேற் காட்டில் கருமாரி!

தஞ்சையில் நீயே முத்துமாரி!
சமயபுரத்தில் நீ மகமாயி!
காயாமொழியில் முப்புராதி!
தாயே சரணம் ஜெயசக்தி!

செந்தூர்தலத்தில் வேல்உகந்தாள்!
ஈங்கோய் மலையில் லலிதையம்மா!
விருந்தா வனத்தில் கன்னித்தாய்!
திருக்கடவூரில் அபிராமி!

விந்திய மலையில் நந்தாதேவி!
விமலைத் தாயாய் பாபநாசத்தில்!
ஆலவாய்சக்தி அங்கயற் கண்ணி!
மராட்டிய நாட்டில் சக்தி பவானி!

இந்திரபுரியில் பைரவித்தாய்!
நீலப்பொருப்பில் யாமலைத்தாய்!
திருவண் ணமலையுண் ணமுலைத்தாய்!
கேதாரத்தில் கோதைநாயகி!

சிதம்பரம் தனில் நீ சிவகாமி!
சேதுபீடத்தில் தாமரைக் கன்னி!
காயாமொழியில் நீமுப்புராதி
தாயேசரணம் ஜெய சக்தி!

கன்யா குமரியில் கன்னீஸ்வரி!
நாகுலத் தலத்தில் நாகம்மா!
ஆரூர் தலத்தில் கமலே நாயகி!
பேரூர் தலத்தில் பச்சைநாயகி!

உஜ்ஜ யினியில் பத்ரகாளி நீ!
கூர்ச்சரம் தனில் நீ முப்புரமாலினி!
இமய கிரியில் நீ உலகநாயகி!
துவரை நகரில் நீ பூதநாயகி!

குன்றத்தில் நீயே சிவசக்தி!
கோட்டையில் நீயே ஜெகதாம்பாள்!
கோலாப்பூர் தனில் நீ குங்குமத்தாம்
ஒற்றியூர் தனில் நீ வடிவாம்பாள்!

பண்ணரி தலத்தில் நீ மாரியம்மா!
பாடலி புரத்தில் நீ பாஞ்சாலி!
காயாமொழியில் நீ முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

எங்கும் நிறைந்த பராசக்தி
எத்தனை பேர் தான் உனக்கம்மா!
அருள் ஞானக் கண்ணியும் நீயே!
அகல் நெடுங் கண்ணியும் நீயே

மங்கலக் கண்ணியும் நீயே
மனையறக் கண்ணியும் நீயே!
பாசக் கண்ணியும் நீயே!
பருவக் கண்ணியும் நீயே!

கங்கைக் கண்ணியும் நீயே!
கல்விக் கண்ணியும் நீயே!
காதல் கண்ணியும் நீயே!
கவிதைக் கண்ணியும் நீயே!

தங்கக் கண்ணியும் நீயே!
தாமரைக் கண்ணியும் நீயே!
காயாமொழிக் கண்ணி முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

குவளைக் கண்ணியும் நீயே!
குமரிக் கண்ணியும் நீயே!
மூலக் கண்ணியும் நீயே!
மூடாக் கண்ணியும் நீயே!

மழலைக் கண்ணியும் நீயே!
மதிஒளிக் கண்ணியும் நீயே!
மான்விழிக் கண்ணியும் நீயே!
மடைநீர்க் கண்ணியும் நீயே!

கலைச் சுடர்க் கண்ணியும் நீயே!
கருணைக் கண்ணியும் நீயே!
காவியக் கண்ணியும் நீயே!
கனவுக் கண்ணியும் நீயே!

கயல் விழிக் கண்ணியும் நீயே!
கற்பனைக் கண்ணியும் நீயே!
காயாமொழிக் கண்ணி முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

நெற்றிக் கண்ணியும் நீயே!
நீளக் கண்ணியும் நீயே!
வெற்றிக் கண்ணியும் நீயே!
வேள்விக் கண்ணியும் நீயே!

பற்றுக் கண்ணியும் நீயே!
பழகும் கண்ணியும் நீயே!
பயன்தரு கண்ணியும் நீயே!
பரிசுக் கண்ணியும் நீயே!

உள்ளக் கண்ணியும் நீயே!
உணர்வுக் கண்ணியும் நீயே!
உறவுக் கண்ணியும் நீயே!
ஓவியக் கண்ணியும் நீயே!

மின்னும் கண்ணியும் நீயே!
மேன்மைக் கண்ணியும் நீயே!
காயாமொழிக் கண்ணி முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

புண்ணியக் கண்ணியும் நீயே!
பூசைக் கண்ணியும் நீயே!
புனிதக் கண்ணியும் நீயே!
புதுமைக் கண்ணியும் நீயே!

எண்ணக் கண்ணியும் நீயே!
இதயக் கண்ணியும் நீயே!
இயக்கும் கண்ணியும் நீயே!
என்னுயிர்க் கண்ணியும் நீயே!

அன்புக் கண்ணியும் நீயே!
ஆசைக் கண்ணியும் நீயே!
அருளும் கண்ணியும் நீயே!
அக்கினிக் கண்ணியும் நீயே!

வண்ணக் கண்ணியும் நீயே!
வாழும் கண்ணியும் நீயே!
காயாமொழிக் கண்ணி முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

தெய்வக் கண்ணியும் நீயே!
தேவைக் கண்ணியும் நீயே!
சேவைக் கண்ணியும் நீயே!
திருவருள் கண்ணியும் நீயே!

மையல் கண்ணியும் நீயே!
மயக்கும் கண்ணியும் நீயே!
தையல் கண்ணியும் நீயே!
தாரக் கண்ணியும் நீயே!

செய் தொழில் கண்ணியும் நீயே!
செழிப்புக் கண்ணியும் நீயே!
சிரிப்புக் கண்ணியும் நீயே!
சிறப்புக் கண்ணியும் நீயே!

மெய்ப்பொருள் கண்ணியும் நீயே!
விழிப்புக் கண்ணியும் நீயே!
காயாமொழிக் கண்ணி முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

பிறவிக் கண்ணியும் நீயே!
பிறவாக் கண்ணியும் நீயே
இறவாக் கண்ணியும் நீயே
இனிமைக் கண்ணியும் நீயே!

அறிவுக் கண்ணியும் நீயே!
அருமைக் கண்ணியும் நீயே!
அருளுரைக் கண்ணியும் நீயே!
அமைதிக் கண்ணியும் நீாய!

பரிவுக் கண்ணியும் நீயே!
பாதைக் கண்ணியும் நீயே!
வாய்மைக் கண்ணியும் நீயே!
வார்த்தைக் கண்ணியும் நீயே!

நிறைவுக் கண்ணியும் நீயே!
நீதிக் கண்ணியும் நீயே!
காயாமொழிக் கண்ணி முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

நியாயக் கண்ணியும் நீயே!
ஞானக் கண்ணியும் நீயே!
தானக் கண்ணியும் நீயே!
நிதானக் கண்ணியும் நீயே!

தியாகக் கண்ணியும் நீயே!
தியானக் கண்ணியும் நீயே!
தீபக் கண்ணியும் நீயே!
செல்வக் கண்ணியும் நீயே

துவக்கும் கண்ணியும் நீயே!
சோதனைக் கண்ணியும் நீயே!
உற்பத்திக் கண்ணியும் நீயே!
உயர்வுக் கண்ணியும் நீயே!

வியக்கும் கண்ணியும் நீயே!
விளக்கும் கண்ணியும் நீயே!
காயாமொழிக் கண்ணி முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

செந்தமிழ் மகிமை நீயேதான்!
திருப்பெயர் முழுதும் நீயேதான்!
அம்பிகை என்பதும் நீயேதான்!
ஆதி சக்தியும் நீயே தான்!

இன்ப வல்லியும் நீயே தான்!
இனிய தேவியும் நீயே தான்!
ஈஸ்வரி வடிவமும் நீயேதான்!
எந்தாய் என்பதும் நீயேதான்!

அன்னையும் தாதியும் நீயேதான்!
தங்கையும் தமக்கையும் நீயேதான்!
நங்கையும் மகளும் நீயேதான்!
அம்சங்கள் யாவும் நீயேதான்!

சந்தப் பாடலும் நீயேதான்!
நாவின் சக்தியும் நீயேதான்!
காயாமொழி வாழ் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

தாயாம்பிகை! தமிழாம்பிகை!
காயாம்பிகை! கன காம்பிகை!
ஞானம்பிகை! கமலாம்பிகை!
தாயே சரணம் ஜெய சக்தி!

மாயாம்பிகை! மலராம்பிகை!
மதுராம்பிகை! பவழாம்பிகை!
பாலாம்பிகை! பரிவாம்பிகை!
தாயே சரணம் ஜெய சக்தி!

யோகாம்பிகை! உலகாம்பிகை!
மோகாம்பிகை! சூலாம்பிகை!
மூகாம்பிகை! சுந்தராம்பிகை!
தாயே சரணம் ஜெய சக்தி!

போகாம்பிகை! புவனம்பிகை!
குரலாம்பிகை! குசலாம்பிகை!
காயாமொழியின் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

செகதாம்பிகை! சித்திராம்பிகை!
தேனம்பிகை! மீனம்பிகை!
செண்பகாம்பிகை! சித்தாம்பிகை!
தாயே சரணம் ஜெயசக்தி!

பகவதாம்பிகை! பரையாம் பிகை!
பாலியாம்பிகை! பதுமாம் பிகை!
பட்டாம்பிகை! மருவாம் பிகை!
தாயே சரணம் ஜெயசக்தி!

வகுளாம்பிகை! பர்வதாம்பிகை!
வாலாம்பிகை! வடிவாம் பிகை!
மஞ்சளாம்பிகை! மாலாம் பிகை!
தாயே சரணம் ஜெயசக்தி!

புகழாம்பிகை! உறவாம் பிகை!
முருகாம்பிகை! சுகாம்பிகை!
காயாமொழியின் முப்புராதி
தாயேசரணம் ஜெயசக்தி!

உக்கிராம்பிகை! உருவாம்பிகை!
முத்தாம்பிகை! மோகனும்பிகை!
ஊர்த்துவாம்பிகை! சுடராம்பிகை!
தாயேசரணம் ஜெயசக்தி!

சத்தாம்பிகை! சந்தனும்பிகை!
தரலாம்பிகை! தாராம்பிகை!
தரினும்பிகை! தயாம்பிகை!
தாயேசரணம் ஜெயசக்தி!

துர்க்காம்பிகை! முழுதாம்பிகை!
துளசாம்பிகை! மங்களாம்பிகை!
குசாம்பிகை! அஞ்சனும்பிகை
தாயே சரணம் ஜெயசக்தி!

விருத்தாம்பிகை! வேலாம் பிகை!
வீராம்பிகை! வீரியாம்பிகை!
காயாமொழியின் முப்புராதி!
தாயேசரணம் ஜெயசக்தி!

கலசாம்பிகை! கண்ணும்பிகை!
கற்பாம்பிகை! கற்பகாம்பிகை!
வனசாம்பிகை! வரமாம்பிகை!
தாயேசரணம் ஜெயசக்தி!

அழகாம்பிகை! அருளாம்பிகை!
அற்புதாம்பிகை! அங்களாம்பிகை!
வாழ்வாம்பிகை! வைராம்பிகை!
தாயே சரணம் ஜெயசக்தி!

தைலாம்பிகை! தையலாம்பிகை!
கங்காம்பிகை! பிரமாம்பிகை!
அணுவாம்பிகை! ஆதியாம்பிகை!
தாயே சரணம் ஜெயசக்தி!

அலங்காரம்பிகை! அபிசேகாம்பிகை!
அநுபவாம்பிகை! அநுக்கிரகாம்பிகை!
காயாமொழியின் முப்புராதி!
தாயே சரணம் ஜெயசக்தி!

சுந்தராம்பிகை! கற்பூராம்பிகை!
அகாம்பிகை! ஆத்மாம்பிகை!
அமுதாம்பிகை! கார்த்திகாம்பிகை!
தாயே சரணம் ஜெயசக்தி!

விந்தாம்பிகை! வித்தியாம்பிகை!
வித்தாம்பிகை! இசையாம்பிகை!
இரத்தினும்பிகை! ரேணுகாம்பிகை!
தாயேசரணம் ஜெயசக்தி!

சந்திராம்பிகை! பிரியாம்பிகை!
தவாம்பிகை! காமாம்பிகை!
நல்லாம்பிகை! நடனும்பிகை!
தாயேசரணம் ஜெயசக்தி!

சிந்தூராம்பிகை! தெய்வாம்பிகை!
திரிபுராம்பிகை! குருவாம்பிகை!
ஞாயாமொழியின் முப்புராதி!
தாயேசரணம் ஜெயசக்தி

வாணும்பிகை! யமுனும்பிகை!

மானும்பிகை! விக்கினும்பிகை!

பாகாம்பிகை! அன்னும்பிகை!

தாயேசரணம் ஜெயசக்தி!

தேனும்பிகை! திருவாம்பிகை!

செல்லாம்பிகை! எல்லாம்பிகை!

ஏழுலகாம்பிகை! இடாகினியாம்பிகை!

தாயே சரணம் ஜெயசக்தி!

காஞ்சனும்பிகை! லலிதாம்பிகை!

அசலாம்பிகை! அமலாம்பிகை!

காளிகாம்பிகை! தனும்பிகை!

தாயேசரணம் ஜெயசக்தி!

சாந்தாம்பிகை! குணும்பிகை!

அறிவாம்பிகை! அருவாம்பிகை!

காயாமொழியின் முப்புராதி!

தாயே சரணம் ஜெயசக்தி!

நீதாம்பிகை! நீலாம்பிகை!

நேசாம்பிகை! நிழலாம் பிகை!

இயலாம் பிகை! இமையாம்பிகை!

தாயே சரணம் ஜெய சக்தி!

நாதாம்பிகை! ஒளியாம்பிகை!

தானும்பிகை! குஞ்சராம் பிகை!

மருவாம்பிகை! மருவூராம் பிகை!

தாயே சரணம் ஜெய சக்தி!

சீவாம் பிகை! இடபாம்பிகை!

மூங்கிலாம் பிகை! பெரியாம்பிகை!

சோதியாம்பிகை! செல்வாம் பிகை!

தாயே சரணம் ஜெய சக்தி!

காவிரியாம்பிகை! வனும் பிகை!

அகிலாம்பிகை! அமராம் பிகை!

காயா மொழியின் முப்புராதி

தாயே சரணம் ஜெய சக்தி!

கோமள வல்லி! அமுத வல்லி!

தியாக வல்லி! தியான வல்லி!

ஞான வல்லி! நாகவல்லி!

தாயே சரணம் ஜெய சக்தி!

மோகன வல்லி! யாக வல்லி!

சுந்தர வல்லி! சுதந்திரவல்லி!

கனக வல்லி! கற்பூர வல்லி!

தாயே சரணம் ஜெய சக்தி!

மோன வல்லி! காஞ்சன வல்லி!

செண்பக வல்லி! சிந்தூரவல்லி!

வேதவல்லி! விவேக வல்லி!

தாயே சரணம் ஜெய சக்தி!

ஆனந்த வல்லி! அற்புதவல்லி!

நாயக வல்லி! நடனவல்லி!

காயாமொழியின் முப்புராதி

தாயே சரணம் ஜெய சக்தி!

சங்கரி! சாயினி! சக்தி மீனாட்சி!

ஈஸ்வரி! துர்க்கா! கௌமாரி!

சவுந்தரி! காளி சதுர்புஜநாயகி!

தாயே சரணம் ஜெய சக்தி!

மங்கல சுந்தரி! மகிசா சூரனி!

திரிபுர சுந்தரி! ஸ்ரீ தேவி!

இச்சா கிரியா சித்தரூபிணி

தாயே சரணம் ஜெய சக்தி!

சுந்தரி! மந்தரி! இந்திரி! நீலி!

அகிலாண்டீஸ்வரி! திரி சூலி!

நந்தினி! நாகினி! குங்குமசுமங்கலி

தாயே சரணம் ஜெய சக்தி!

சங்கர மாலினி! நாரண ரூபிணி!

துக்க நிவாரணி! காமாட்சி!

காயா மொழியின் முப்புராதி

தாயே சரணம் ஜெய சக்தி!

மஞ்சள் முகத்தி! மங்கலக் கழுத்தி!
மரகத நிறத்தி! மாவடிதவத்தி!
கரும்புக் கரத்தி! கருணை விழிச்சி!
தாயே சரணம் ஜெய சக்தி!

பஞ்சாட் சரத்தி! பதுமாசனத்தி!
அரும்பு நகைச்சி! அமுத தனத்தி!
மதுரச் சிவத்தி! தவ குணத்தி!
தாயே சரணம் ஜெய சக்தி!

அஞ்சு முகத்தி! நல முகத்தி!
பாசாங்குசத்தி! நடுவனத்தி!
கயிலாசனத்தி! திரி குணத்தி!
தாயே சரணம் ஜெய சக்தி!

மஞ்சு நிலத்தி! மாசிவ புரத்தி!
பாதாம் புயத்தி! கச்சிப் புரத்தி!
காயா மொழியின் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

வண்டார் குழலி! ஆன்ம சொரூபிணி!
துளசி பவானி! அட்சர சுந்தரி!
பாவ சம்மாரிணி! மடலார் குழலி!
தாயே சரணம் ஜெய சக்தி!

செண்டார் குழலி! தீர்த்த நாயகி!
கங்கண பந்தினி! ஆரணி அம்பாலி!
தருமத் தலைவி! சவுந்தரிய லகரி!
தாயே சரணம் ஜெய சக்தி!

கொந்தார் குழலி! சுரிகுழல் அந்தரி!
பூரணி! சாம்பவி! புராதன தேவி!
சூரிய குமாரி! சுடரொளி நாயகி!
தாயே சரணம் ஜெய சக்தி!

பந்தார் குழலி! பாமரர் துணையே!
மாசிலா மணியே! மனதின் நிறைவே!
காயா மொழியின் முப்புரத்தி!
தாயே சரணம் ஜெய சக்தி!

பாணபுசுண்டி! பரிகாயுத தேவி!
கௌசிகி தேவி! சிவதூதி!
பாரதிதேவி! பீமா தேவி!
தாயே சரணம் ஜெய சக்தி!

ஆரண்யாயினி! சம்பு நாகேஸ்வரி!
மார்க்கதாயினி! பூதி ஆங்காரி!
மாணிக்க நாயகி! பூரணி ஓங்காரி!
தாயே சரணம் ஜெயசக்தி!

ஓம் பெருந்தவமே! ஒளிமுதற் பொருளே!
சூல தாரிணி! தூம்ரலோசனி!
பிரணவ ரூபிணி! அடைக்கல தேவி!
தாயே சரணம் ஜெய சக்தி!

மோட்சரூபிணி! குண்டலினி சக்தி!
முழுமுதற் தேவி! சாமுண்டீஸ்வரி!
காயாமொழியின் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

தனுர்த்தரி தேவி! வச்சிர தாரணி!
நளகூபரணி! தண்டினி தேவி!
ஈஸ்வர மூர்த்தி! எமகண்டா தேவி!
தாயே சரணம் ஜெய சக்தி!

விநாயகதேவி! பைரவி அன்னை!
ஆணவம் குறைப்பாய்! பார்க்கவிராணி!
ஊழ்வினை தீர்ப்பாய்! சுவலாதேவி!
தாயே சரணம் ஜெய சக்தி!

அனலேஸ்வரி! சக்கிரிணி தேவி!
ராஜ ராஜேஸ்வரி! மாலாதாரிணி!
அசுவனி தேவி! மிருகவாகினி!
தாயே சரணம் ஜெய சக்தி!

மனப்பயம் நீக்கும் மந்திரரூபிணி!
மயக்கம் தீர்க்கும் ஞானபோதினி!
காயா மொழியின் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

தினமும் பூசை தேவிக்கு
காயா மொழியில் நடக்குதம்மா!
செவ்வாய் தோறும் தனி பூசை
சிறப்பாய் நடந்து வருகுதம்மா!



பணிவுடன் மாதக் கடைச்செவ்வாய்
இரவில் விளக்கு பூசையம்மா!
ஆடிக்கடைசிச் செவ்வாயில்
அன்னை தேவிக்குத் திருநாளாம்!

கனிவுடன் வணங்கும் பக்தர்களின்
கஷ்டம் தீர்ப்பாள் கௌமாரி!
கருமவினையும் பிறவி வினையும்
நீக்கி அருள்வாள் முப்புராதி!

மனநோய் தீர்க்கும் மாமருந்து!
கவலையைப் போக்கும் தேன் விருந்து!
காயா மொழியின் முப்புராதி!
தாயே சரணம் ஜெய சக்தி!

குருட்டு விழிக்கு ஒளி தந்து
குழந்தை பேறுக்கு அருள் தருவாள்!
செவிட்டு செவிக்கு ஒலிதந்து
சித்தமும் தெளிய வரமருள்வாள்!

மிரட்டும் பில்லி பெரும் சூன்யம்
யந்திரக்கட்டு! மந்திரத் தகடு
அனைத்துத் துயரமும் முப்புராதி
தாயை நினைத்தால் பறந்தோடும்!

உருட்டு புரட்டு பித்தலாட்டம்!
பொச கெட்ட தனத்தை மாற்றிடுவாள்!
செருக்கு ஆணவம் கீழ்புத்தி
சிந்தையில் வராமல் காத்திடுவாள்!

வரட்சி ஏழ்மை வறுமையை நீக்கி
வலிமையும் வளமையும் தந்திடுவாள்
காயாமொழியின் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

நினைத்ததை வழங்கும் தேவியவள்!
கேட்டதை கொடுக்கும் சக்தியவள்!
துணையாய் நிற்கும் கவசமவள்!
வாழ்வு முழுதுக்கும் காவலவள்!

வணங்கி தீபம் ஏற்றிடுக!
வளர்த்து ஜோதியைப் போற்றிடுக!
வண்டமிழ் கவசம் நானுரைக்க!
வார்த்தையாய் வருக மகாசக்தி!

துணிவே! துணையே! கௌமாரி!
சுடரே! ஒளியே! ஜெயசக்தி!
உனையே உயிராய் காணுகிறேன்!
குரலே உனதாய் பாடுகிறேன்!

தினமும் திருவடி வீழ்பவர்க்கும்
திருப்புகழ் கவசம் சொல்பவர்க்கும்
திருவருள் தருக! முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!



பிரதான கோயில் வாயிலின் மேல் உள்ள தாய் முப்புராதி அம்மன், விநாயகர், முருகனின் அழகிய சிற்ப வடிவங்கள்.

# முப்புராதி சக்தி கவசம்

ஆதித்த நாயகியே!
அருள் சக்தி சிரத்தைக் காக்க!
கார்மேக மழையருளே!
கௌமாரி முகத்தைக் காக்க!

நீதியே! நிறைவே! அழகே!
தேவி நீ! கூந்தல் காக்க!
சித்தாடும் வல்லி! காயா
மொழியாளே! வகிடுகாக்க!

சோதியே! சுடரே! துணையே!
சுந்தரி நெற்றி காக்க!
ஓங்காரத் திருவே தேவி!
குங்குமத் திலகம் காக்க!

ஆதிக்கே அந்தம் தந்த
அன்னையே புருவம் காக்க!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

உலகினை இயக்கும் தாயே!
உண்மையே! விழிகள் காக்க!
ஓம்எனும் பொருளே! ஞான
உருவமே! செவிகள் காக்க!

மலர்மிசை அமர்ந்த சக்தி!
மாதாவே! நாசி காக்க!
மாந்தர்தம் குறை களையும்
பார்வதி! மூச்சு காக்க!

கலையழகு மின்னிடும்
காமாட்சி! கன்னம் காக்க!
கந்தமலர் பூத்த கொம்பே!
மீனாட்சி! வாயைக் காக்க!

நிலத்திற்கு இறைவி! பூமா-
தேவி நீ! தாடை காக்க!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

காற்றிற்கு உணர்வு நல்கும்
காளிநீ! கழுத்தைக் காக்க!
தமிழ்பேச ஒலி வழங்கும்
சக்திநீ! குரலைக் காக்க!

நீற்ருேடு நிறைந்த கீர்த்தி!
செல்வியே நாவைக் காக்க!
திருவடிப் பேறே! சித்தர்
சிந்தையே! தோள்கள் காக்க!

ஊற்ருக அறிவு நல்கும்
உத்தமி! நெஞ்சைக் காக்க!
பூசைக் குகந்த பொற்பே!
உமையாளே! நினைவைக்காக்க!

மாற்றுமருந் தாகும் பூவே!
மாலினி! நகில்கள் காக்க!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

கோமள வல்லியே! புஜங்கள் காக்க!
குலமகளே! கை விரல்கள் காக்க!
குடும்ப தேவியே! வயிறுகாக்க!
குன்ருத இளமையே! உந்திகாக்க!

காமதேனுவே! விலாவினைக்காக்க!
கமல நாயகியே! முதுகைக்காக்க!
கடவுள் சக்தியே! இடையைக் காக்க!
காலகண்டியே! புட்டங்கள் காக்க!

மோகரூபிணி! சுகநிலை காக்க!
சூலதாரணி! குதத்தைக் காக்க!
பொன்னுவாலையே! தொடையைக்காக்க!
பூதநாயகியே! முழங்கால் காக்க!

யோகமாலினி! முட்டியைக் காக்க!
பூதி ஆங்காரி! கணைக்கால் காக்க!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

சக்கர தாரிணி! குதிகால் காக்க!
சாவித்திரிதேவி! பாதங்கள் காக்க!
பாதத்தில் பூத்த பத்து விரலையும்
கங்கண பந்தினி! தாயே காக்க!

துக்க நிவாரணி! முழு உடல் காக்க!
போதாந்த முடிவினி! ஐம்பொறி காக்க!
துய்ய நாயகி! வாழ்வினைக் காக்க!
சுரிகுழல் அந்தரி! வயதினைக் காக்க!

உக்கிர தாண்டவி! உறவினைக் காக்க!
ஓம்பெருந்தேவி! நட்பினைக் காக்க!
சுத்த சித்தியே! குடும்பத்தைக்காக்க!
சுயம்பே! செய் தொழில்நலம் காக்க!

மூக்கண் மடந்தையே! அருளாய் காக்க!
மூலசக்தியே! அணைத்தே காக்க!
காயா மொழியூர் முப்புரதி
தாயே சரணம் ஜெயசக்தி!

ஓங்காரி! பூதம் முனிகள்
துரத்திடும் ஆவி பேய்கள்
துயர்தரும் மனப் பயங்கள்
ஓடோடிப் போகக் காக்க!

ஆங்காரி! பகைவர் செய்யும்
யந்திர மந்திர பில்லிசூன்ய
வஞ்சகம் வராமல்—சூலம்
தூக்கி நீ! காக்க! காக்க!

தூங்காது விழி மலர்ந்தே!
பொழுது கிழமை மாதம் வருசம்
முழுதுமே நிழலாய் மூச்சாய்
சுந்தரி! காக்க! காக்க!

தேன் அருள் வடிவாய்! செல்வ
சிறப்பெலாம் தந்து காக்க!
காயமொழியூர் முப்புராதி
தாயேசரணம் ஜெயசக்தி!

வெந்த புண் விழிகட்குள்ளே?
வேலினைச் சொருகி துன்பம்
விளைத்திடும் தீராப் பகையை
விலக்கி நீ! இமையாய் காக்க!

மந்தம் மாந்தம் வயிற்றில் தோன்றும்
வாய்வு நோய்! கன்னப் பத்து
கண் பல் தொண்டை வலிகள்
கௌமாரி! வராமல் காக்க!

கண்ட மாலை சொறி சிரங்கு
பரங்கியொடு—நெஞ்சடைப்பு
வலிப்புகள் வாதநோய்கள்
மகாவாணி! வராமல் காக்க!

சன்னி சூலை இருமல் வெப்பு
சளிநோய்கள் வராமல் காக்க!
காயா மொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

படுக்கை நோய் மண்டை வெட்டு
பால் நோய்கள்! கால் கடுப்பு
என்புருக்கி! சுரவகைகள்
என்றுமே வராமல் காக்க!

குடலிறக்கம் இரத்த அழுத்தம்
குலை நோய்கள் காசம் வெட்டை
பெருநோய்கள் வெடிப்பு ஊரல்
படை கிரந்தி வராமல் காக்க!

கொடிய இளம் பிள்ளை வாதம்
மூலம் பவித்திரம் கல்லடைப்பு
நரம்பு நோய்கள் பக்கவாதம்
விதை வாய்வு வராமல் காக்க!

உடல் உள்ளம் நோயே இன்றி
உயிர் வாழும் வரை நீ காக்க!
காயா மொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

உலவிடும் விலங்கின் துன்பம்
ஊர்வன பாம்பின் விஷங்கள்!
தொடர்கிற நோய்கள் விரட்டி!
துரத்திடும் கோள்கள் துன்பம்
தொடாமல் தாயே காக்க!

எலி பூனை தேள்கள் பூரான்
எண்ணிலா பூச்சி சிலந்தி
அரணை பல்லி ஓணான் குளவி
விசமென்றும் தொடாமல் காக்க!

புலி கரடி சிங்கம் யானை
நாய் எருமை ஓநாய் பன்றி
மாடு முதலை சுறா திமிங்கிலங்கள்
காண்டாமி ருகம்அண்டாமல் காக்க!

வலிமை வளமை வழங்கும் கவச!
வாக்காகி சக்தி காக்க!
காயா மொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

ஓம்பெரும் சக்தி! மேல்திசை காக்க!
ஓம்பரம்பொருளே! கீழ்திசை காக்க!
ஓம்பெரும் ஒளியே! வடதிசை காக்க!
ஓம்பெரும் சுடரே! தென்திசைகாக்க!

ஓம்பெரும் அருளே! அக்கினி திசைகாக்க!
ஓம்பெரும் அன்பே! வாயு திசைகாக்க!
ஓம்பெரும் முதலே! நிருதி திசை காக்க!
ஓம்பெரும்உணர்வே !ஈசான்யதிசைகாக்க.

ஓம்பெரும் ஞானமே! முன்பின் காக்க!
ஓம்பெரும் அறிவே! இட வலம் காக்க!
ஓம்பெரும் நலமே! மேலே காக்க!
ஓம்பெரும் உயிரே! கீழே காக்க!

ஓம்பெரும் உலகே! ஒளி முதற்பொருளே!
ஓம்பெரும் உயர்வே! ஓம்பெரும் தேவி!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

காயாமொழிக் குளக்கரையில்
கௌமாரி உன் கோயிலிலே
சன்னதியில் பக்தியுடன்
தாள்பணிந்து வணங்குகிறோம்!

வாய்மணக்க புகழ் பாடி
வண்ண விளக்கேற்றுகிறோம்!
மனமகிழ்ந்து துதிபாடி
சுடர் விளக்கேற்றுகிறோம்!

தாய்முகத்தைக் காண்பதற்கு
தவவிளக் கேற்றுகிறோம்!
தரிசனத்தைப் பெறுவதற்கு
ஞானவிளக் கேற்றுகிறோம்!

ஆயிரம் குத்து விளக்கேற்றி
அன்புடனே வேண்டுகிறோம்!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

சொர்ணமணி விளக்கேற்றி
ஜோதிமுகம் காண வந்தோம்!
சுத்த சித்த பூஜை செய்து
அருள்பெற உருகிப் பாடுகிறோம்!

நற்கதி காட்டும் நாயகியே!
நல்லோர்க் கெட்டும் நன்பொருளே!
தன்விதி மீருத் தகையினளே
தாயேசரணம் ஜெயசக்தி!

பிரமானந்தப் பழங்கடலே!
பேரின்ப ஞான வடிவழகே!
பெருவெளி தன்னைப் படைத்தவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

துரிசறு கருவிகள் வகுப்பவளே!
துதிப்போர் நெஞ்சில் துலங்குவையே
காயாமொழியூர் முப்பராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

தத்துவம் கடந்த தனிப் பொருளே!
சாதிசமயம் கடந்தவளே!
தளராமனதைத் தருபவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

வித்தினுள் வித்தை வகுத்தவளே!
வியர்வையில் பல்லுயிர் படைத்தவளே!
வித்தினில் முளைபதம் வைத்தவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

முக்குணம் உயிர்களுக் கீந்தவளே!
முன்னைப் பழம்பொருள் ஆனவளே!
பின்னைப் புதுமையின் புதியவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

சக்கர ரகசியம் காப்பவளே!
கலைமகள் வீணையின் சொல்லினளே!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

மாறுதல் இல்லா மாண்பினையே!
மங்கலம் தானாய் ஆனவளே!
வழிபடும் மறைகளைக்காப்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

பாரிடை ஐந்தாய்ப் பரந்தவளே!
நீரிடை நான்காய் நிகழ்பவளே!
தீயிடை மூன்றாய் திகழ்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

ஆறும் சுவையாய் இனிப்பவளே!
வளியிடை இரண்டாய் இருப்பவளே!
வெளியிடை ஒன்றாய் சிரிப்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

ஆறுதல் அளிக்கும் அரவணைப்பே!
காரிய வெற்றிக் கைவிளக்கே!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

நாதமும் பிரமமும் வகுத்தவளே!
நலங்களும் வளங்களும் வைத்தவளே!
நல்லறம் அனைத்தும் செய்தவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

வேதமும் விதிகளும் படைத்தவளே!
வினைகளை அளந்து அமைத்தவளே!
நினைவின் நிலையில் இருப்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

ஆதியும் அந்தமும் கடந்தவளே!
அற்புதம் விளைவிக்கும் அருள் நிதியே!
ஆளாய்க் கொண்டெமை ஆள்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

பாதியாய் பரமனில் உறைபவளே!
பக்தி வெள்ளமாய் சுரப்பவளே!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

கடவுளர்க் கெல்லாம் தாய் நீயே!
கற்பன யாவுமுன் திருப்பெயரே!
கள்ளப் புலன்சுட் டெரிப்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

கொடையுளம் கொண்டெமைக் காப்பவளே!
தொழுபவர் இருள்நீக்கொளி மகளே!
ஓம்எனும் மந்திரத்துட் பொருளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

தடைகளைத் தகர்க்கும் திரிசூலி!
தரணியைக் காக்கும் மாகாளி!
கடைக்கண் விழியருள் காட்டம்மா!
தாயே சரணம் ஜெயசக்தி!

கடலும் நீயே! படகும் நீயே!
பயணம் செய்யும் பக்தர்கள் யாமே!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

நானெனும் அகந்தையை அழிப்பவளே!
தனதெனும் சிறுமையை மாய்ப்பவளே!
கருணையைப் பொழிந்து காப்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

ஆணவப்பேயை ஒழிப்பவளே!
அஞ்சா நெஞ்சைத் தருபவளே!
அடியவர் மனக்குகை அமர்ந்தவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

ஆணில் பெண்ணாய் ஆனவளே!
பெண்ணில் ஆணாய் ஜொலிப்பவளே!
கண்ணில் விசையை வைத்தவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

தானமும் தவமும் நீயம்மா!
கவியே! நீ என் தாயம்மா!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

மந்திர மொழிபல கொண்டவளே!
தந்திர நூல்பல தரித்தவளே!
எந்திரம்பல உள்ளிருப்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

விண்மீன் மிக்கொளிர் முக்கனியே!
விண்ணும் மண்ணும் தொழும் தாயே!
வேண்டுவ வேண்டியாங் களிப்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

பெண்மையில் மென்மை வைத்தவளே!
மென்மைக்கு மேன்மை சேர்ப்பவளே!
ஈயென இரவா நிலையருளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

நின்னை இரக்கும் நினைவருளே!
இல்லையெனக் கூருத் திறமருளே!
காயாமொழியூர் முப்புராதி!
தாயே சரணம் ஜெயசக்தி!

குலமக்கள் விளக்கரம் ஏற்றுகிற
சுடர்ஒளிதீப ஜோதியிலே!
தெரியுது தேவியின் திருமுகமே!
தாயே சரணம் ஜெயசக்தி!

மழலையர் உருவத்தில் வருகிறாய்!
மங்கையர் முகத்தினில் சிரிக்கிறாய்!
பக்தர்கள் உள்ளத்தில் தெரிகிறாய்!
தாயே சரணம் ஜெயசக்தி!

கலகல கிணிகிணி கோயில்மணி!
தாரை தப்பட்டை தமுக்கு ஒலி!
தாம்தீம் தகதிமி நாதமம்மா!
தாயே சரணம் ஜெயசக்தி!

அழகுக்கே அழகென ஆலயத்தில்
அன்னைஉன் சன்னதி ஆனதம்மா!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

திரை நுரை இல்லா அருட்கடலே!
நரை திரை நீக்கும் திருமருந்தே!
வரும் வினையகற்றும் உயிர்த்துணையே!
தாயே சரணம் ஜெயசக்தி!

கரைவோர் கண்ணீர் துடைப்பவளே!
கரையாய் காவல் இருப்பவளே!
கருணை மழையைப் பொழிபவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

பொறையும் பெருமையும் உடையவளே!
உயிர்க்குலம் படரும் அருட்கிளையே!
உலகினை இயக்கும் இறைவடிவே!
தாயே சரணம் ஜெயசக்தி!

குறையே இல்லாக் குலமகளே!
முருகனின் தாயே மலைமகளே!
காயாமொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெயசக்தி!

பலவாய் விரிந்த பரம்பொருளே!
பயனை அளிக்கும் விளைநிலமே!
பழமாய்க் கனிந்த சுகநிலையே!
தாயே சரணம் ஜெயசக்தி!

மலைகளில் இமயமலை நீயே!
மரங்களில் அரச மரம் நீயே!
நதிகளில் கங்கை நதி நீயே!
தாயே சரணம் ஜெயசக்தி!

கலைநலம்! மனநலம்! வளர்ப்பவளே!
கலகமும் போர்களும் களைபவளே!
கருஉயிர் காக்கும் திருமகளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

தலையாய் மேனியை ஆள்பவளே!
அறிவாய் மனதில் வாழ்பவளே!
காயாமொழியூர் முப்புராதி!
தாயே சரணம் யெஜசக்தி!

அம்மா! நீயே மாரியம்மா!
அம்மா! நீயே காளியம்மா!
அம்மா நீ! திரி சூலியம்மா!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! நீ கௌ மாரியம்மா!
அம்மா நீ ஸ்ரீதேவியம்மா!
அம்மா நீ முப்புராதியம்மா!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! நீயே வேலியம்மா!
மங்கையர் கழுத்தின் தாலியம்மா!
அம்மாநீ கற்புக் காவலம்மா!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! நீயே சக்தியம்மா!
அடியவர் மனதின் புத்தியம்மா!
காயா மொழியூர் முப்புராதி!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! உனக்கு திருநாளாம்!
ஆடிக் கடைசி செவ்வாயில்!
தேரினில் நீயே திருப்பவனி!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! எங்கள் அம்மாவே!
ஆயிரங்கண்ணுள்ள பானைக்குள்ளே!
அம்மா உனக்கு மாவிளக்கு!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! காக்கும் அம்மாவே!
ஆடவர் வேண்டுதல் நோன்பிருந்து!
இடைநூல் கோத்து ஆடுவாராம்!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! என்றதும் உருகுகிறாய்!
அணைத்து எங்களுக் கருளுகிறாய்!
காயா மொழியூர் முப்புராதி!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! உனக்கு முளைப்பாரி!
அனைவரும் எடுத்து வருகின்றார்!
ஆடிப்பாடி மகிழுகின்றார்!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! உனது அணைப்பினிலே!
முலைப்பால் உண்டு மகிழுதம்மா!
உயிர்க்குலம் உனது மடிமேலே!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! நீஎமக் காதாரம்!
அன்பு வடிவினில் நீதாரம்
பாசம் வளர்க்கும் பூவாளி!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! நீயே மாகாளி!
பகையை அழிக்கும் கொடு நீலி!
காயாமொழியூர் முப்புராதி!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! உனது நீலிக் கதை!
தவறுக்கு தண்டனை தந்த கதை!
தர்மத்தைக் காக்கும் நீதிக்கதை!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! என்னைப் படைத்தவளே!
அருளைத் தினமும் தருபவளே!
அவனியில் வாழ வைப்பவளே!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! அருமை அம்மாவே!
அறிவை ஊட்டி வளர்த்துவிடு!
அகிலத்தில் உயர்வாய் வைத்துவிடு!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! நீயே அருள் செல்வம்!
வாழ்வதற்குதவும் பொருள்செல்வம்!
காயா மொழியூர் முப்புராதி!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! உன்னை நினைத்தாலே!
அம்மா என்றுனை அழைத்தாலே!
ஆனந்தக் களிப்பே வருகிறது!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! உனது துதிபாடி!
அம்மா எனஉன் அடி வீழ்ந்தால்!
மனது நிம்மதி அடைகிறது!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! வாடும் பயிரெனையே!
அக்கினி துயர்படு புழு எனையே!
மீட்டி அருள் மழை பொழிந்தருள்க!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! நானுன் திருப்பாட்டு!
பாடும் மனதுக்குத் தெம்பூட்டு!
காயா மொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! என்னையுன் கோயிலாக்கு!
அடியேன் கண்ணை வாயிலாக்கு!
பாடும் வாயைக் கதவாக்கு!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! மனதை விளக்காக்கு!
அலையும் நினைவை திரியாக்கு!
அருளால் சுடர்விடும் ஒளியாக்கு!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! உயிரை பீடமாக்கு!
அம்மா அதிலுனை தெய்வமாக்கு!
பூஜைப் பொருளாய் எனை மாற்று!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! நானொரு அப்பாவி!
வழியினை காட்டு நீ தப்பாது!
காயா மொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! வலிமையை எனதாக்கு!
ஆக்கம் ஊக்கத்தைத் துணையாக்கு!
அனைத்திலும் காரிய சுபமாக்கு!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! துவங்கும் தொழிலாகு!
அகிலம் வியக்கும் செயலாகு!
முழுதும் புதுமைப் புகழாகு!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! இன்பத்தை வாழ்வாக்கு!
அளவுடன் ஆசையை இனிப்பாக்கு!
நட்பையும் உறவையும் உரமாக்கு!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! சொகுசை சுகமாக்கு!
ஆயுள் வயசை முழுசாக்கு!
காயா மொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! பணிவை சொல்லிக் கொடு!
அடக்கம் பொறுமையை அள்ளிக்கொடு!
கல்வி முழுதையும் கற்றுக் கொடு!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! சொல்லில் இனிமை கொடு!
அறிவொளிக் கூரினை இணையவிடு!
பேச்சில் கந்தர்வ நளினம் கொடு!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! நல்லோர் நட்பை கொடு!
கலைபல வல்லோர் உறவைக் கொடு!
சகல கலையிலும் முழுமை கொடு!
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! நீ என் கவியாகு!
ஆதித்தர் வளர்க்கும் தமிழாகு!
காயா மொழியூர் முப்புராதி
தாயே சரணம் ஜெய சக்தி!

அம்மா! என்னை ஆளாக்கு!
அகிலம் போற்றும் நூலாக்கு!
செந்தூர் சக்தி வேலாக்கு!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! நீ...தா! அருள்வாக்கு!
அழியாப் புகழ்மிகு செல்வாக்கு!
நடக்கட்டும் எனது சொல்வாக்கு!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! என்னைத் தேராக்கு!
அமர்ந்து நீசொல் திருவாக்கு!
வரும்பொருள் கூறட்டும் என்நாக்கு!
தாயே சரணம் ஜெயசக்தி!

அம்மா! நீஎன் பாரதியே!
அடியேன் என்று முன் சாரதியே!
காயா மொழியூர் முப்புராதி!
தாயே சரணம் ஜெயசக்தி!



# நூற்பயன்

காயாமொழி எனும் திருப்பதியின்
கண் கண்ட சக்தி! கௌமாரி!
தாயாம் கருணை முப்புராதி!
அம்மன் தரிசனம் பாடுதற்கு!

சேயாம் குழந்தை வேலனுக்கு!
செந்தூர் சக்தி அருள் தந்தாள்!
இதனைப் பாடும் பக்தருக்கும்!
கேட்டு மகிழும் மக்களுக்கும்!

வாயாரப் பாடும் அனைவருக்கும்!
வளமும் நலமும் பெருகிடுமே!
வாழ்வில் உயர்வு துவங்கிடுமே!
வரவு இன்பம் ஆகிடுமே!

காயா மொழியூர் முப்புராதி!
சக்தியின் கருணை அருளாலே!
நினைப்பது நடக்கும்! ஜெயமாகும்!
கேட்டது கிடைக்கும்! சத்தியமே!

# மங்கல வாழ்த்து

வாழிய! மங்கலம் வாழியவே!
வளர்நல வளங்கள் வாழியவே!
வாழி! இந்நூல் வாழியவே!
பாடும் பக்தர் வாழியவே!

வாழிய! மங்கலம் வாழியவே!
மனைவி மக்கள் சுற்றும், சூழம்
நட்பும் பாசமும் வாழியவே!
நல்லவை யாவும் வாழியவே!

வாழிய! மங்கலம் வாழியவே!
மனையறம் பெருகி வாழியவே!
வழிவழியா கவரும் மனித
மாண்பு வளர்ந்து வாழியவே!

வாழிய! மங்கலம் வாழியவே!
காயா மொழியூர் முப்புராதி!
அம்மன் தரிசனம் வாழியவே!
வையகம் வாழி! வாழியவே!

★ சுபம் ★

காயாமொழி முப்புராதி அம்மன் கோவில்
சி. பா. ஆதித்தனார் மகாமண்டபத்தின் எழில் தோற்றம்

